7th May 1962]

*Polytechnics (admission)*

*46 Q.—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the number of applications received during 1961–62 for admission to polytechnics; and

(b) the number of students admitted?

THE HON. SRI R. VENKATARAMAN: (a) 9,059.

(b) 3,060.

SRI M. KALYANASUNDARAM: இந்தப் பள்ளிகளுக்கு மனுப் போட்ட மாணவர்களிலே 6,000 பேர்களுக்கு அதிகமாக இடமில்லாத காரணத்தால், அவர்கள் இடம் பெற முடியவில்லை. அரசாங்கம கொடுத்திருக்கிற அறிக்கையைப் பார்த்தாலும், நம்முடைய தேவைக்கும் இது குறைவாக இருக்கிறது. ஆகவே இதை அதிகரிப்பதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN: மனுப்போட்டவர்கள் எல்லாம் தகுதியுள்ளவர்கள் என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாணசுந்தரம் நினைப்பது சரியல்ல என்று நினைக்கிறேன். ஒன்பதினாயிரத்துக்கு மேற்பட்ட பேர் மனுப்போட்டார்கள் என்று சொன்னால், அதிலே தகுதியில்லாதவர்களும் பலர் இருக்கக்கூடும். உதாரணமாக, ஸ்பெஷல் மேதமாடிக்ஸ் எடுத்துக் கொண்டவர்களாக இருக்கவேண்டுமென்று குறிப்பு இருக்கிறது. ஆனால், அவ்வாறு இல்லாதவர்களும் மனுப்போடுகிறார்கள். எந்த நாட்டிலும், மனுப் போட்டவர்களுக்கெல்லாம் இடம் கிடைப்பதில்லை. தகுதியுள்ளவர்களுக்கு இடம்கொடுப்பதற்கு ஏற்பாடு செய்கிறார்கள். நமது ராஜ்யத்தில் இந்தத் தொழிற்பள்ளிகளை அதிகரிக்கப் போகிறோம். அதற்குத் திட்டம் இருக்கிறது. 6,000 பேருக்கு ஏதோ இடமில்லாததினால் தகுதி உள்ளவர்களுக்கு இடம் கிடைக்கவில்லை என்று கனம் அங்கத்தினர் சொன்னது சரியல்ல.

SRI T. L. SASIVARNA THEVAR: எந்த அடிப்படையில் தகுதி நிர்ணயிக்கப்படுகிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN: விசேஷமான சப்ஜெக்டுகளிலே மாணவர்களுடைய திறன், பொதுவாக தொழில் செய்வதற்கான "ஆப்டிடியூட்" அதோடுகூட அவர்களுடைய "எக்ஸ்டிரா கரிகுலர் ஆக்டிவிடீஸ்", அதாவது விளையாட்டு முதலியவைகள், கனமான வேலை செய்யக்கூடிய "பிஸிகல் பிட்னெஸ்", இவைகளையெல்லாம் பார்த்து தகுதி நிர்ணயிக்கப்படுகிறது.

SRI K. A. MATHIALAGAN: ஏற்கனவே இந்தத் தொழிற் பள்ளிகளில் படித்துத் தேறியவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை என்பது உண்மையா ?

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினர் இதைப் பரிசீலனை செய்துவிட்டு கேள்வி போட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். இன்றைக்கு பாலிடெக்னிகளில் படித்தவர்களுக்கு வேலை இல்லை என்ற நிலைமை இல்லை. மூன்று மாதத்திற்கு ஒரு முறை நம்முடைய எம்பிளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சுகள் மூலமாக எந்தெந்த வேலைகளுக்கு ஆட்கள் கிடைக்கவில்லை என்று ஒரு ஜாபிதா பிரசுரம் செய்கிறோம். அந்த ஜாபிதாவைப் பார்த்தால் இந்த மாதிரி ஆட்கள் கிடைக்கவில்லை என்று தெரிய வரும்.

SRI K. R. SAMBANDAM: இந்த மாதிரி தொழிற் கல்வியை அதிகமான மாணவர்களுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்று நமது சர்க்கார் மனப்பான்மை கொண்டிருக்கிறார்கள். ஆர்ட்ஸ் காலேஜுகளுக்கு மாணவர்கள் அதிகமாகப் போவதைத் தடுப்பதற்கும், மாணவர்கள் ஒரு தொழிலை கற்றுக்கொண்டும், படிக்கும்போது சம்பாதிப்பது ஆகிய இரண்டையும்

ஒரேசமயத்தில் செய்வது என்ற முறை ஜப்பான் முதலிய நாடுகளில் இருப்பது போலவே இங்கேயும் நடத்துவதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா? அப்படி இருந்தால் எப்பொழுது நடத்த ஆரம்பிப்பார்கள்?

**The Hon. Sri R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் சொன்ன பிரியாம்பிள் புரிந்தது. ஆனால் என்ன செய்யவேண்டுமென்று சொல்லுகிறார் என்பது புரியவில்லை. திருப்பிச் சொல்லும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**Sri K. R. SAMBANDAM** : மாணவர்கள் தொழிற் கல்வி கற்பதினால் உடனே சம்பாதிப்பதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. எல்லோரும் பி.எ., எம்.எ., என்று படித்தால் கல்லூரியில் இட நெருக்கடி, வேலை இல்லாத் திண்டாட்டம் ஏற்படுவதால், தொழிலும் கல்வியும் சேர்ந்து சொல்லிக் கொடுக்க சர்க்கார் முன்வருமா?

**The Hon. Sri R. VENKATARAMAN**: நமது நாட்டின் கல்வி முறை ஒரு விதமாக நீண்டகாலமாக வளர்ந்து வந்திருக்கிறது. அந்தக் கல்வி முறையில் என்ன செய்திருக்கிறோம் என்று சொன்னால், 8-வது வகுப்பு வரை படித்தவர்களுக்கு, ஏதாவது தொழில் செய்யவேண்டுமென்று விரும்புகிறவர்களுக்கு, தனியாக இண்டஸ்டிரியல் பள்ளிகள் வைத்துவிட்டோம். 10-வது வகுப்பு படித்து தொழிலுக்குப் போகவேண்டுமென்று சொன்னால், பாலிடெக்னிகள் வைத்திருக்கிறோம். கல்லூரிப் படிப்பு வேண்டுமென்று நினைக்கிறவர்களுக்கு எஞ்சினியரிங் காலேஜுகள் வைத்துவிட்டோம். இரண்டையும் சேர்த்து பயிற்சி கொடுக்கவேண்டுமா வேண்டாமா என்பதைப் பற்றி கல்வி நிபுணர்களிடத்திலேயே கருத்து ஒற்றுமை கிடையாது. சிலர் சேர்த்துக் கொடுக்க வேண்டுமென்று நினைக்கிறார்கள். சிலர் தனித்தனியாகக் கொடுக்கவேண்டுமென்று நினைக்கிறார்கள். இது ஒரு பெரிய பிரச்னை. நமது ராஜ்யத்திற்குத் தேவையான திறன் உள்ள தொழிலாளர்களைத் தயாரிப்பதற்கு நாம் இப்பொழுது ஏற்பாடு செய்து வருகிறோம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**Sri M. KALYANASUNDARAM** : தனியார் நடத்தக்கூடிய பள்ளிகள் இருக்கின்றன. சர்க்கார் நடத்தக்கூடிய பள்ளிகள் இருக்கின்றன. மாணவர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை எப்படி அமுல் நடத்தப்படுகிறது? அதற்கான ஸ்தாபனங்கள் எப்படி அமைக்கப்பட்டிருக்கின்றன?

**The Hon. Sri R. VENKATARAMAN** : ஒவ்வொரு பள்ளிக்கூடத்திற்கும் ஒரு செலக்ஷன் கமிட்டி இருக்கிறது. அந்தக் கமிட்டி தேர்ந்தெடுக்கிறார்கள்.

**Sri J. MATHA GOWDER** : ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒவ்வொரு பாலிடெக்னிக் ஏற்படுத்தினால் இந்த மாணவர்களைச் சேர்ப்பதில் காணப்படும் சில குறைகளை தவிர்க்கமுடியுமென்று நினைக்கிறேன். சர்க்கார் பட்ஜெட் உரையில் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு தொழிற் பள்ளி நிறுவப்போவதாகச் சொல்லப்பட்டது. இதை அமுல் செய்வதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள்? இந்தக் கல்வியாண்டிலிருந்து ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு பாலிடெகனிக்கை ஏற்படுத்த முடியுமா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : மாவட்டத்திற்கு ஒன்று அல்ல, இரண்டுகூட இருக்கிறது. நீலகிரி ஜில்லாவுக்கு இப்பொழுது ஒன்று சாங்க்ஷன் ஆகியிருக்கிறது, அதுவும் கூடிய சீக்கிரம் வந்துவிடும்.

**Sri M. KALYANASUNDARAM** : இன்னும் 6 பள்ளிகளை மூன்றாவது திட்ட காலத்தில் நிறுவப் போவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஜுன் மாதத்தில் எவ்வளவு பள்ளிகள் அதிகரிக்கப்படும்?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இதற்குத் தனியாகக் கேள்வி போடவேண்டும். அதற்காக நடவடிக்கை எடுத்திருக்கிறோம். ஆனால் என்ன ஸ்டேஜில் இருக்கிறது என்பதற்கு இப்பொழுது என்னிடம் தகவல் இல்லை.

7th May 1962]

SRI C. CHIRANJEEVULU NAIDU: How many applications were considered on merit and admitted in 1961-62?

THE HON. SRI R. VENKATARAMAN: Sixteen per cent is reserved for Scheduled Castes and Scheduled Tribes, twenty-five per cent is received for educationally and socially backward classes and the rest is open for merit.

SRI T. L. SASIVARNA THEVAR: சுமார் 9,000 மனுக்கள் வந்ததில் 6,000 பேர்களுக்கு இடம் கிடைக்கவில்லை என்று சொன்னார்கள். மூன்றாவது திட்ட காலத்தில் மேலும் 6 பள்ளிகளை ஏற்படுத்தப்போவதாகச் சொன்னார்கள். இப்பொழுதுள்ள பாலிடெக்னிகளின் ஸ்டிரெங்த்தை அதிகப்படுத்த முடியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN:—தேவை எப்படி வருஷா வருஷம் இருக்கிறதோ, அதற்குத் தகுந்தபடி இந்தப் பள்ளிக்கூடங்களை விஸ்தரிப்பதில் கஷ்டம் இருக்காது. ஆறு பள்ளிகள் என்று சொல்லி விட்டால், அதற்கு மேல வைக்கக்கூடாது என்று அர்த்தம் இல்லை. அவசியமிருந்தால், அதற்கு அதிகமாக வைக்கலாம். அவசியமில்லை என்றால் குறைவாகவும் வைக்கலாம்.

SRI M. D. THIAGARAJA PILLAI: இப்பொழுது பாஸ் செய்துள்ள மாணவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்? அவர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டிருக்கிறதா? வேலை கிடைக்காதவர்களுக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN: முன்பேயே இதற்குப் பதில் சொல்லிவிட்டேன். பொதுவாக, இந்தப் பள்ளிகளிலே படித்தவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை என்ற நிலைமை இல்லை. ஏதாவது ஒன்று, இரண்டு "ஸ்டிரே" கேஸ்கள் இருக்கலாம். அவர்களும் எம்பிளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சில் ரெஜிஸ்தர் செய்து கொண்டால், அவர்கள் இருக்கிற பகுதிகளில் வேலை கிடைக்காவிட்டாலும், வேறு பகுதிகளில், அதாவது பற்றாக்குறையாக இருக்கின்ற பகுதிகளில் அவர்கள் பெயரை அனுப்பி பரிசீலனை செய்வதற்கு வழி செய்திருக்கிறோம்.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM: இந்தத் தொழிற் பயிற்சியில் பெண்களுக்கு ஏதாவது இடம் கொடுக்கப்பட்டிருக்கிறதா? அவ்வாறு அவர்கள் எடுக்கப்படாவிட்டால், அதற்குக் காரணம் என்ன? அவர்கள் தகுதியில்லை என்று சர்க்கார் தீர்த்துக்கட்டி விட்டார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN: இந்த வருஷத்தில் ஒன்று நிச்சயமாக ஆரம்பித்து விடுகிறேன்.

SRI SAW. GANESAN: தேவையான அளவுக்கு பயிற்சி பெறுகிறவர்கள் கிடைக்கவில்லை என்று சொன்னார்கள். அப்படியானால், எஞ்சினியரிங் காலேஜுகளில் இருக்கிற இடம், மற்றும் ஆர்ட்ஸ் காலேஜுகளில், பிஸிக்ஸ், கெமிஸ்டிரி முதலிய துறைகள் இருக்கிற கல்லூரிகளில் உள்ள சாதனங்களை எல்லாம் பயன்படுத்தி, இன்னும் இந்த பாலிடெக்னிக் மாணவர்களின் எண்ணிக்கையை அதிகரிப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. எஞ்சினியரிங் கல்லூரியை எடுத்துக் கொண்டால், அங்கேயுள்ள சாதனங்களுக்கு $1\frac{1}{2}$ மணி நேரத்திற்கு மேல் வேலை இல்லை. இதை எல்லாம் பயன்படுத்தி, பாலிடெக்னிக் வகுப்புகளை எளிதாகவும், சுலபமாகவும் ஆக்குவதற்கு சர்க்கார் முயற்சிக்குமா?

THE HON. SRI R. VENKATARAMAN: நிபுணர்களுடைய கருத்து ஸ்ரீ கணேசன் அவர்கள் சொன்னதற்கு மாறாக இருக்கிறது. எஞ்சினியரிங் கல்லூரிகளில் பாலிடெக்னிக் வைக்கக் கூடாது, தனியாக

[7th May 1962

வைக்க வேண்டுமென்றும், பிரித்துவிட வேண்டுமென்றும் அவர்கள் உத்தரவு போட்டார்கள். ஆகவே அந்த விதமாகச் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. அவ்வாறு செய்வதினால், எஞ்ஜினியரிங் கல்லூரிகளில் படிக்கிறவர்களின் தரம் குறைந்துவிடும் என்ற அச்சம் இருக்கிறது. நான் இப்பொழுது சொன்னதைத் தவிர, ஜூனியர் டெக்னிகல் ஸ்கூல்கள் அமைப்பதற்கும் ஏற்பாடு செய்கிறோம். அதற்கு வேண்டிய முயற்சி எடுத்து வருகிறோம்.

9-00 a.m. **SRI G. VENKATARAMAN:** ஸார், தனியார் நடத்துகின்ற தொழில் பள்ளிக்கூடங்களுக்கு, எஞ்ஜினியரிங் கல்லூரிகள், மருத்துவக் கல்லூரிகளுக்கு செலக்ஷன் கமிட்டி இருப்பது போல, ஜில்லா வாரியாகவோ அல்லது ஜோனல் ரீதியிலோ சர்க்கார் கமிட்டியை அமைக்க ஏற்பாடு செய்வார்களா?

**THE HON. SRI R. VENKATARAMAN:** அந்த விதமான செலக்ஷன் கமிட்டிகள் இப்பொழுதே இருந்து வருகின்றன.

**SRI K. R. SAMBANDAM:** இப்பொழுது கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், ஷெட்யூல்ட் காஸ்ட்ஸ் அண்டு ட்ரைப்ஸ் பிள்ளைகளுக்கு 16 சத விகிதம், எஜிகேஷனலி பாக்வார்ட் பிள்ளைகளுக்கு 25 சதவிகிதம், மற்றவை மெரிட் பேரில் சேர்க்கப்படுகிறார்கள் என்று. இந்நிலை, ஷெட்யூல்ட் காஸ்ட், ஷெட்யூல்ட் ட்ரைப் அண்ட் எஜிகேஷனலி பாக்வார்ட் பிள்ளைகளும் மெரிட் அளவில் மார்க்குகள் வாங்கியிருந்தால், மெரிட் காடிகரியில் சேர்த்துக்கொள்ளப் படுகிறார்களா?

**THE HON. SRI R. VENKATARAMAN:** எஜிகேஷனலி அண்ட் சோஷலி பாக்வார்டாய் இருப்பவர்களும் மெரிட்டிலே வரக்கூடுமானால், ஒதுக்கி வைக்கும் இடங்களுக்கு அவர்களும் வரமுடியும். அதாவது, நாம் ஒதுக்கி இருக்கும் எண்ணிக்கைக்கு திறமை வாய்ந்த மாணவர்கள் அப்ளிகேஷன் போட்டிருந்தால், அவர்களும் இந்த 41 சதவிகிதத்தில் கொடுக்கப்படவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

**SRI J. MATHA GOWDER:** தொழில் பள்ளிக்கூடங்களிலே, பெண்களும் சேர்க்கப்படுவார்கள் என்று சொன்னார்கள். அவர்களுக்கு அங்கே சமையல் ஒழுங்காகச் செய்வது பற்றி கற்றுக்கொடுக்கப்படுமா என்று அறியவிரும்புகிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN:** கனம் மாதா கௌடருக்கு பெண்கள் சமையல்தான் செய்வார்கள் என்ற எண்ணம் இருக்குமானால், அவருக்கு ஆபத்து வர இருக்கிறது என்பதைத் தெரிவிக்கிறேன். (சிரிப்பு) ஆனால், அவர்களுக்கு என்னென்ன கற்றுக் கொடுக்கிறோம் என்று சொல்லவும் விரும்புகிறேன். எலெக்ட்ரானிக்ஸ், ரேடியோ மெக்கானிக்ஸ் முதலியவைகளை அவர்கள் திறமையாகச் செய்ய முடியும். மேலும், டெலிபோன் இண்டஸ்ட்ரீஸ் போன்ற அந்தவிதமான பயிற்சிகளும் அளிக்கப்படுகின்றன.

**SRI P. PALANI PILLAI:** ஸார், திருவண்ணாமலையில் பாலிடெக்னிக் எப்பொழுது அமைக்கப்படும்? இப்பொழுது குடியாத்தத்தில் ஒன்றும், வெல்லூரில் ஒன்றும் இருக்கின்றன. ஏதாவது சாத்தனூருக்கு மாற்றிக்கொடுக்கவாவது உத்தேசம் உண்டா?

**THE HON. SRI R. VENKATARAMAN:** வடாற்காடு மாவட்டத்தில் இரண்டு பாலிடெக்னிக்குகள் இருக்கின்றன. மேற்கொண்டு அமைப்பது பற்றி பரிசீலனைதான் செய்யவேண்டும்.

**SRI T. L. SASIVARNA THEVAR:** தொழில் கல்விக்குத் தேவை இருக்கிறது என்று சொன்னார்கள். மத்திய சர்க்காரும், மாநில சர்க்காரும ஏற்பாடு செய்யும் விதத்தில், வேலைத்தகுதி உள்ளவர்கள் எவ்வளவு பேர்கள் தேவை என்று மூன்றுவது திட்டக் காலத்தில் ஏதாவது கணக்கு எடுக்கப்பட்டிருக்கிறதா?

**THE HON. SRI R. VENKATARAMAN:** அவையெல்லாம் திட்டக் கமிஷன் ரிபோர்ட்டில் இருக்கின்றன.

**MR. SPEAKER:** The Questions are over.